# சைவ சமயத்தைக் குறித்த ஒரு சம்பாஷணை.

சென்னை மாநகரில் திருமயிலையில் உள்ள ஒரு தெருவில் **சிவஞானம்**, **சுந்தரம்** என்னும் இரண்டு சிறுவர்கள் சிலகாலத்திற்கு முன்பு வசித்து வந்தனர். அவர்களிருவரும் ஒரே வயதினர். சைவ சமயத்தைப் பின் பற்றிய தாய்தந்தையரையுடையோர். அறிவிலும் சற்றேறக்குறையச் சுந்தரத்தைச் சிவஞானத்திற்குச் சமமானவனென்றே சொல்லலாம். இவ்விருவரும் இராயப்பேட்டையிலுள்ள பாதிரிமார் பாடசாலையில் நாலாவது பார்ம் வரையில் ஒருங்கே கல்விபயின்றார்கள். பிறகு குடும்பத்தில் நேர்ந்த கஷ்டங்களினால் சுந்தரம் கலாசாலைக்குப் போகாது நின்று விட்டான். ஆனாலும் பெரிய வாணிகஸ்தலங்களில் உத்தியோகத்தி லமர வேண்டியோர்க்குரிய 'புக்கீபிங்" டைப் ரைடிங்' முதலிய சில பரீட்சைகளில் இரண்டு வருடத்தில் தேறி இரங்கூன் நகரத்திற்குச் சென்று அங்கிருந்த தன் உறவினர் உதவியால் ஒரு பெரிய ஐரோப்பிய வாணிப் சாலையில் நல்ல அலுவலில் அமர்ந்தான். சில ஆண்டுகளுள் அவனுக்குத் திரண்ட செல்வஞ் சேர்ந்தது. சிவஞானமோ, பல வகையான இடை யூறுகள் நேர்ந்தும் அவைகளால் மனச்சோர் வடையாமல் கல்விக்காக உழைத்து பி. ஏ. பரீட்சையில் நன்கு தேறினான். இக்காலத்தில் ஆங்கிலக் கல்விகற்கும் வாலிபர்களிற் பலர், தாம் உயர்தரப் பரீட்சையில் தேறுவதெல்லாம் பெரிய உத்தியோகங்களி லமர்ந்தோ, அன்றேல் சட்டத்திருமுறைகளையோதியோ மற்றெவ்வாற்றாலாயினும் பெரும் பொருள் சேகரித்து உலக இன்பத்தைப் புலன்களார நுகர்தற்கே, என்னுங்கொள்கை பூண்டொழுகுகின்றனர். ஆனால் சிவஞானம் இந்த அவஞானத்தால் மயக்குறவில்லை. தான் அதுவரையிற்கற்ற கருவி நூல்களினாலேயே மனிதப்பிறப்பின் லக்ஷியத்தை யடைய முடியாதென்றும், மனிதன் தன்னியல்பையும் தலைவனியல்பையும் அறிந்து அழிவில்லாப் பேரின்பம் அடையும் வழிகளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டுமாயின், சமய நூலாராய்ச்சி செய்யல் இன்றியமையாத தென்றும், தான் கற்றகல்வி தனக்கு மாத்திரமன்றிப் பிறருக்கும் பயன்படற்பொருட்டே என்றும் உண்மையுணர்ந்து, கலைப்புலமை யோடு சமய நூற்படிப்பையும் நல்லொழுக்கத்தையும், மேன்மேல் வளர்த்துவந்தான். இவ்விரண்டு நண்பர்களும் வெகுதொலைவிலுள்ள பட்டினங்களில் தனித்தனி - வசிக்கவேண்டிவந்தும் தமது நட்பை மறந்து விடவில்லை. குடும்ப க்ஷேமங்களைப் பற்றி அடிக்கடி ஒருவர்க் கொருவர் கடித மெழுதுவ துண்டு. இவ்வண்ணம் சுமார் பத்து வருடங்கள் கழிந்தபின்பு, சுந்தரம் தன் தாய் நாடாகிய தமிழகத்தையும் தன்னின்னுயிர் நண்பனாகிய சிவஞானத்தையும் காண வேண்டுமென்னும் ஆசையோடு சென்னைக்குவந்து ஒரு ஞாயிற்றுக் கிழமைகாலையில் சிவஞானத்தின் இரும்பிடம்போய்ச்சேர்ந்தான். இவன் வருகையைக்கண்ட சிவஞானம் நேசனைக் கைகுவித்துமுறையால் வணங்கி அகமு. கமகிழ்ச்சியோடு வரவேற்க நின்றான். "Dear friend, good morning!" என்கிற சொற்களோடும் சுந்தரம் சிவஞானத்தோடு கைகுலுக்கி வீட்டிலிருந்த நாற்காலியி லமர்ந்ததும்,

சிவஞானத்தின் புதல்வியாகிய புனிதவதி தன் தந்தையின் நண்பர் வீட்டிற்கு வந்ததைத் தாயுடன் சொன்னான். உடனே பாதோதகம் வர, சுந்தரம் அச்செம்பினையும் தான் தரித்து வந்த ஆங்கிலச் செருப்பின் முடிகளையும் நோக்கி விழித்துக்கொண்டிருக்கையில், "தங்களுக்குத் தாகத்திற்கு வேண்டுமோ வென்றும். இன்னுரையும் பிறந்தது. சுந்தரம் சில வினாடிகள் கழித்து" Thanks, just now காபி drink பண்ணி வந்தே னென்றான். பின்பு ஒருவாறு இக்குழப்பத்தி னின்றும் தெளிந்த சுந்தரம் தனது நண்பனை உற்று நோக்கி,

"என்ன சிவஞானம்! எல்லாம் ஒல்டு வேஷனாயிருக்கிறதே நீ பூசியருக்கும் சாம்பலையும் போட்டிருக்கும் கொட்டைமாலையையும் பார்த்தால் நீ தானோ பி. ஏ. pass பண்ண சிவஞானம் பிள்ளையவர்களென்று doubt (சந்தேகிக்க) பண்ண வேண்டியிருக்கிறதே? இது என்ன wonder" (ஆச்சரியம்) என்றான்.

**சிவஞானம்:** - (புன்சிறிப்போடு) சுந்தரம்! என்னிடத்தில் என்ன புதிய மாறுதல் கண்டாய்? நமது முன்னோர்கள் காட்டிய வழிப்படி தானே நடக்கமுயல் கின்றேன்.

**சுந்தரம்:** - நான் சொல்வதும் அதுதான். இவ்வளவு educated (படிப்பாளி) ஆய் இருந்தும் பழைய வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் என் observe பண்ணுகிறாய் (கைக்கொள்ளுகிறாய்) என்பது எனக்கு விளங்கவில்லை.

**சிவஞானம்:** - பழையவழக்கங்களில் தள்ளத் தக்கவைகளைத் தள்ளுதல் அவசியமே, ஆனால் அவைகளுள் பல கொள்ளத்தக்கவைகள் இருக்கின்றனவே அவைகளைக் கொள்வது ஒழுங்குதானே?

**சுந்தரம்:** - என்னமோ, சிவஞானம், நீ சொல்வத னுண்மை எனக்குத்தெரியவில்லை. நமது முன்னோர்களுடைய superstition கள் (குருட்டுநம்பிக்கைகள்) எல்லாம் மெய்யா யிருக்குமோ? இரங்கூனில் போன ஜனவரி மாதம் ஒரு தமிழ்ப் புராணிகர் பிரசங்கம் பண்ணினார். நான் chance ஆக (எதிர்பாராமல்) அதைக் கேட்க நேர்ந்தது. அவர் சொன்னதில் இரண்டொன்று சொல்கிறேன் கேள்: சுடுகாட்டுச் சாம்பலில் புரண்டு கொண்டிருந்த ஒரு சொறிபிடித்தநாய் அங்கே கொளுத்துவதற்கு வைத்திருந்த ஒரு பிணத்தின் நெற்றியில் தன் கால்பட ஓடிவிட்டதாம். அந்தக் காலிலிருந்தசாம்பல் பிணத்தின் மேல்பட்ட பாக்கியத்தால் அந்த உடம்பை விட்டு நீங்கிய soul (ஆன்மா) மோட்சம் அடைந்ததாம். இதற்குப் ஒரு புராணத்திலிருந்து பாட்டும் quote பண்ணினார் (எடுத்துக் காட்டினர்). இதையார் நம்பக்கூடும்? என்ன கொலைபாதகனாயிருந்தாலும் சரி, "சிவ சிவ" என்று சொல்லிவிட்டானானால் பரிசுத்தமாய் விடுவானாம். ஒரு ஆலயத்தைச்சுற்றிவந்தால் ஒரு கோடி புண்ணியம் உண்டாம். ஒரு தீர்த்தத்தில் முழுகிவிட்டால் தேகத்திலிருக்கும் அழுக்கோடு பண்ணிய பாவங்களெல்லாம் தீர்ந்து விடுமாம். கழுத்தில் மாட்டிக்கொண்டிருக்கும் கொட்டைகளில் ஒன்றைத் தரித்துக்கொண்டாலே எத்தனையோ புண்ணியம் கைகூடி விடுமாம். அப்படியானால் நீ இது வரையில் பூசிய விபூதியையும் தரித்த ருத்திராட்சத்தையும் கணக்கிட்டால்

பேல் பேலாகப் புண்ணியங்கள் சவர்க்கத்தில் உன் credit இல் உனக்குச் சொந்தமாக இருக்கவேண்டும் புண்ணியந்தேட என்ன easy ஆன (இலகுவான) வழி! சிவஞானம், என் மேல் கோபித்துக்கொள்ளாதே. எனக்கிதெல்லாம் கேட்ட முதல் சமயம் என்றால் வேம்பாயிருக்கிறது. இதை யெல்லாம் நம்புவது பயித்தியக்காரத்தன மென்றெண்ணுகிறேன். மற்ற religions (சமயங்கள்) கூட இந்த கதியில் தான் இருக்கின்றன.

**சிவஞானம்:** - நீ குறித்த கொள்கைகளை யெல்லாம் உனக்குத்தெரிந்த அருத்தத்தில் நானும் நம்பவில்லை. சைவ சமயமும் எனக்குத் தெரிந்தவளவில் நம்பும்படி சொல்லவில்லை. தேவாராதி திருமுறைகளிலாவது சித்தாந்த சாஸ்திரங்களிலாவது கேவலம் வெளிவேஷத்தினால் மாத்திரம் மோட்சம் நேரிற்கிடைத்து விடுமென்று பேசப்படவில்லை. சமய நூலாராய்ச்சி நன்றா, கவாய்க்கப்பெறாதவர்கள் தாம் இப்படிப்பட்ட விபரீதங்களை மெய்யென்று சொல்லுவர். குற்றம் பிறர்பாலிருக்க அதைச்சமயத்தின் மீதேற்றி நமது முன்னோர்களை இகழ்வது சரியல்ல.

**சுந்தரம்:** - இது என்ன? சமயம் சமயம் என்கிறாய். எந்த சமயத்தை எவன் கண்டான்? அவனவன் தன் தன் religion ஏ (சமயமே) மோட்சத்திற்கு வழிகாட்டுவது என்கிறான். இதில் யார் சொல்லை நம்புவது? இவர்கள் சொல்வதற் கெல்லாம் proof (சாக்ஷி) என்ன? கடவுள், கடவுள் என்கிறார்கள். அதையார் பார்த்தது? God, God என்று கிளிப்பிள்ளை போலச் சொல்வதைத் தவிர வேறொன்றுங் காணோம். God, soul, (பதி, பசு) என்று எல்லாம் விசாரித்துத்தி. ரிவது வீண் என்று நினைக்கிறேன். ஏதோ நம்மால் கூடிய மட்டும் பொய் சொல்லாமல், திருடாமல், பரோபகாரஞ் செய்து யோக்கியதையோடு வாழவேண்டும். இதற்குக் சமயம் என்னத்திற்கு சாத்திரம் என்னத்திற்கு?

**சிவஞானம்:** - சுந்தரம்! நீ கேட்டகேள்விகளுக்கெல்லாம் சரியான பதில்களுண்டு. அவைகள் கிடக்கட்டும், 'யோக்கியமாய் வாழவேண்டும். பொய் சொல்லல் முதலிய குற்றங்கள் செய்யக் கூடாது' என்றாயே, அதைக்குறித்து யாராவது "அப்படி என் செய்யக் கூடாது"? என்று கேட்டால் நீ என்ன சொல்லுவாய்'

**சுந்தரம்:** - இதற்கு ஒரு காரணம் வேண்டுமா? நல்லவர்களாய் வாழ முயற்சி செய்வது natural தானே? (இயல்புதானே?)

**சிவஞானம்:** - மனிதப்பிறப்பையடைந்த நமக்கு அறிவென்பதொன்றுண்டு; அது திரிகரணங்களால் செய்யப்படும் ஒவ்வொரு வேலைக்கும் காரணம் கேட்டுக் கொண்டேயிருக்கிறது. அதன் கேள்விகட்குப் பதில் சொல்லாது நடப்பது அறிவுடையோர் செய்கையல்ல. அநேகமாக 'இயற்கை' 'சுபாவம்' என்று சொல்லுவ தெல்லாம் நம்முடைய அறிவின் குறைவையே காட்டுகிறது. கூடியவரையில் நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும், நம்பும் ஒவ்வொரு கொள்கைக்கும்,

போதுமான நியாயங்களிருக்கவேண்டும். இல்லாவிட்டால் நமக்குப் பகுத்தறிவு இருந்தும் இல்லாதது போலாகும் அல்லவா?

**சுந்தரம்:** - இருக்கட்டும், நாம் நல்லவர்களாய் நடக்க வேண்டுமென்பது உனக்கும் சம்மதந்தானே? அதற்கு நீ என்ன reasons (காரணங்கள்) கொடுப்பாய்?

**சிவஞானம்:** - என்னுடைய காரணங்கள் யாவும் சமயசம்பந்தமானவைகளாகவே இருக்கும். ஆன்மாக்கள் தங்களது முயற்சியலும் இறைவனது திருவருளாலும் தமது பாசம் நீங்கப் பெற்று ஞானமடைந்து மோட்சம் சேர்வதற்கு நல்ல நடக்கை இன்றியமையாதது. மனத்தின் கண்ணும் மாசில்லாது தருமநெறியே நின்று புண்ணியங்களைச் செய்ய வேண்டும். அதிலும் பிறந்து இறந்து உழலும் நாம் இந்தப் 'பொல்லாப் பெருங்கடலை நீந்திக்' கடவுளது திருவடியை அடைய வேண்டுமாயின் சுயநலங்குறித்த அகப்பற்று புறப்புற்று என்னும் இரண்டுவித ஆசைகளையும் அடியோடு அறுக்க வேண்டும்.

"எவ்வுயிரும் என்னுயிர் போல் எண்ணி யிரங்கவும் நீன்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"

என்று ஒரு ஞானிவேண்டியபடி அன்பை வளர்க்க வேண்டும். இப்பெரு நோக்கங்கள் நிறைவேறுதற்காகத்தான் நீ முன் குறித்தவைகளைப் போன்ற நற்குண நற்செய்கைகளை நாம் பெற வேண்டுமென்பது. இதுவரையில் நான் சொல்லிவந்ததில் ஒரு உண்மை உனக்குப்புலப்பட்டிருக்கலாம், அதாவது: - சமயத்தைத் தள்ளிவிட்டால், "நாம் ஏன் நல்லவர்களாய் வாழவேண்டும்" என்று கேட்டோர்க்கு, உளங்கொள மறுமொழி சொல்லமுடியாது; தருமவழியில் நிற்கவுமுடியாது என்பதாம்.)

**சுந்தரம்:** - அப்பா நீ சொல்வது எனக்கு clear ஆக (தெளிவாக) விளங்கவில்லை. ஆனாலும் கடைசியில் religion இல்லாவிட்டால் நல்ல நடக்கையோடு வாழமுடியாதென்றாயே, அது எப்படி? சில Agnostics (ஒரு வகை நாஸ்திகர்கள்) மிக யோக்கியர்களாயிருக்கக் காண்கிறோமே?

**சிவஞானம்:** - நண்பனே, உன் நினைவிற்குவரும் அந்த நாஸ்திகர்களது சரித்திரங்களை எல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்து பார். அவர்கள் வாயாலும் எழுத்தாலும் கடவுளில்லை என்று தாம் நம்புவதாகத் தெரிவித்தாலும், அவர்களுக்குத் தெரியாமலே அவர்கள் ஆஸ்திகர்களாகத்தானிருக்கின்றார்கள். கடவுள் இல்லை என்று மறுக்கு முகத்தாலேயே சமயவாதிகள் சொல்லும் கடவுளிலக்கணங்களை ஆராய்பவர்களாகிறார்கள். சமயசாஸ்திரங்களை ஓதுகிறார்கள். இவைகளின் முடிபு அவர்கள் மனதறிய ஒத்துக்கொள்ளாவிட்டாலும் இவைகளுடன் பழகுவதாலேயே இவர்கள் மனதும் செய்கையும் பூவொடு சேர்ந்த நார்போலப் பொலிவடைகின்றது. கடவுளைப்பற்றி மனிதர் பல ஆபாசமான எண்ணங்கொண்டுள்ளார்கள்; அவைகளை அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்த நாஸ்திகர்கள் பரிகசிச்கிறார்கள். அதனால்

அவர்கள் கடவுளை நிராகரித்தவராகார். இந்த சூக்ஷமமான அனுபவ விஷயத்தை நீ ஓய்ந்த காலத்தில் நன்றாய் ஆராய்ந்து பார். உண்மை தோன்றலாம். எனக்கும் இப்படிப்பட்ட ஐயப்பாடுகள் எல்லாம் முன்பு எழுந்ததுண்டு. பிறகு என் அறிவு சற்றே வளர வளர, சமய சார்பு இன்றி உண்மையான நல்லொழுக்கம் கை கூடாது என்னும் நம்பிக்கை என் மனதில் நன்றாய் வேறூன்றி விட்டது. என் அனுபவத்தில் இதனுண்மையை நாளுக்கு நாள் கண்டு வருகிறேன். இன்னும் இதைப்பற்றி விஸ்தாரமாகச்சொல்வது அநாவசியம்.

**சுந்தரம்:** - இவ்விதமான கருத்துகளெல்லாம், என் மனதில் இது வரையில் பட்ட தில்லை. ஆனாலும் எல்லா - சமயங்களும் ஒரு கடவுள் உண்டு என்று நம்புபவை தானே? அப்படிக் கடவுளுண்டு என்பதற்குப் போதுமான evidence (நியாயம்) உண்டா?

**சிவஞானம்:** - ஆஸ்திக சமயங்களெல்லாம் கடவுள் ஒருவர் உண்டொன்று தான் சொல்லுகின்றன. அறிவினளவால் நுனித்து ஆராய்ந்தாலும் கடவுள் உண்டென்று பல அனுமானங்களால் அறியலாம். நமது பெரியோர்களே - இதற்கு வேண்டிய நியாயங்களை தடைவிடைகளோடு விரிவாய்ப் பல நூல்களில் எழுதியிருக்கின்றார்கள். நான் இவைகளைப்பற்றி - ஒன்றும் சொல்லவில்லை, சுருதியினாலும் யுக்தியினாலும் ஒரு பொருளின் இருப்பை நிச்சயிப்பதைவிட அனுபவத்தாலேயே அது உள்ளது என்று காட்டுதல் சிறப்பு. முன்பு நீ 'கடவுளையார் கண்டார்கள்' என்று கேட்டாய். உண்மையாகக் கடவுளைக் கண்டவர்களை உனக்குக் காட்டினால் இறைவன் ஒருவன் இருக்கிறானென ஒத்துக்கொள்வாயா?

**சுந்தரம்:** - அதற்குத் தடையில்லை. கல்வியில்வல்ல சிலர் தங்கள் விபரீத விசாரணையால் ஆகாயக் கோட்டை கட்டி நமது புலன்களுக்கு விஷயமாகிற உலகத்தை அடியோடு இல்லவே இல்லை. அது illusion (மித்தை) என்று சாதிக்கிறார்கள். அதுபோன்ற புரட்டுகள் தான் எனக்கு விளங்குவதில்லை. எந்த விஷயயானாலும் அனுபவத்துக்கு முரணாமல் அதனால் நிச்சயிக்கக் கூடியதாயிருந்தால் அதை உள்ள தென்று கொள்ள என் பின்வாங்கவேண்டும்?

**சிவஞானம்:** - உண்மைதான், ஆனால் இன்னுமொரு விஷயத்தை மறக்காமலிருக்க வேண்டும் : நாமெல்லாம் ஒரே அளவான அறிவின் கூர்மையை உடையவர்களல்ல. நம்மனுபவங்களும் பலதிறத்தறனவாகி முதிர்ச்சியினளவால் வேறுபட்டு நிற்கின்றன. ஆகையால், சடப்பொருள்களைப்பற்றியும் சித்துப் பொருள்களைப்பற்றியும் நமக்கெட்டாத பலவிஷயங்களை, நம்மினு முதிர்ந்த அறிவும் அனுபவமும் உடையோர் சொல்லுவரானால் அவைகளைகாம் மெய்யென்று கொள்ள வேண்டியிருக்கிறது. பெரியோர்சொல்லில் நம்பிக்கை வையாது ஒவ்வொரு விஷயத்தையும் நாமே சோதித்து அறிந்து பிறகே அதை உண்மை என்று கொள்வோ மென்பது முடியாத காரியம். தக்க மூதறிவாளர்கள துரையை நம்பி அவர் சொல்வழி நின்று பிறகு அவர்கள் சொல்லிய துண்மையோ அன்றோ என்று அநுபவத்தாலறிவதே முறைமை. Conservation of energy

(பிரபஞ்சத்திலுள்ள சடசகதியின் அளவு குறைதலும் வளர்தலும் இல்லை என்னும் கொள்கை), Law of Universal Gravitation (ஒவ்வொரு சடப்பொருளும் மற்றெல்லா சடப்பொருள்களையும் தன்னுடைய பருமனுக்கும் தனக்கும் உள்ள தூரத்திற்கும், ஏற்பத் தன் பால் இழுக்கின்றது என்னும் சித்தாந்தம்), The rotation of earth on its own axis round the sun (பூமி இரண்டு. வித நடைகளோடு மிக்க. வேகமாய் சூரியனை சுற்றி வருதல்), என்பது முதலிய எண்ணிறந்த உலக நூற்பொள்கைகளின் உண்மையை நாமே சோதித்தறியாமலே மெய்யென்று நம்புகிறேமல்லவா? அதுபோலவே நம்மியல்பையும், நமது இறைவனாகிய பரம்பொருளினது இயல்பையும், அறிய வேண்டில், அத்துறையில் அதிக தேர்ச்சியடைந்த ஞானிகள் சொல்லியவற்றை மெய்யென்று நம்பி அவர் காட்டிய நெறியைப் பின்பற்றுவது முறை என்று தெரிகிறது. எனக்கும் உனக்கும் கடவுளை - நேரிற் காணமுடியாமையினாலேயே கடவுள் இல்லை என்று முடிவு கட்டி விடக்கூடாது. சுந்தரம், இது வரையில் கூறி வந்ததெல்லாம் உனக்கு உடம் பாடுதானா

**சுந்தரம்:** - உடம்பாடுதான், ஆனால் ஒன்று சொல்ல வேண்டுகின்றேன் பெரியோர்கள் போதனை என்று எதையாயினும் ஒன்றை நம்புவதற்கு முன்பு அதைச் சொன்ன பெரியோர் யாவர்? அவரவ்விஷயத்தைப் பற்றிப் பேசப்போதுமான ஞானமும் அனுபவமும் உடையவர்தானா? அது அவர் சொன்னது தான் என்று கொள்ள இடமுண்டா? அவர் என்ன எண்ணத்தோடு அதைச் சொன்னார்? என்றெல்லாம் யோசித்த பிறகே பெரியோர் வார்த்தை என்பதில் நம்பிக்கை வைக்கலாம். முக்கியமாய் நம் தேசத்தோர் இதை நன்றாய்க் கவனிக்க வேண்டும்." பாரப்பா"," கேளப்பா " என்று தூங்கி வழிகிற கோழை வைத்தியப் பாட்டுகளை எல்லாம் அகஸ்தியர் வாக்காக எத்தனை பேர் கொள்கிறார்கள். இவ்விதமாக நூலைப்புரட்டுதல். பலவிடங்களில் உண்டு என்று கேள்விப்படுகின்றேன். இன்னும் சிலர் மூக்கரையன் சீஷர்கள் போலத் தாம் கெட்டது போலப் பிறரையும் கெடுக்க முயல்வதுங் கூடுமல்லலா? ஆகையால் இதையெல்லாம் சோதித்த பிறகே பெரியோர் வார்த்தை என்பதை அங்கீகரிக்க வேண்டும் என்று என் புத்திக்குப் புலப்படுகிறது,

**சிவஞானம்:** - நீ இப்போது சொல்லியது முற்றிலும் உண்மையே. இத்தகைய துண்ணறிவு உனக்கு இயல்பாய் இருப்பது பற்றி மிகச் சந்தோஷம். நீ காட்டிய வழி எல்லாம் சோதித்த பிறகும் உண்மையில் சான்றோர்களே என்று சிலர் ஏற்பட்டால் அவர்கள் காட்டும் நெறியைப் பின் பற்ற தடையில்லையே?

**சுந்தரம்:** - இல்லை.

**சிவஞானம்:** - நாவுக்கரசர், மாணிக்கவாசகர், திருமூலர், காரைக்காலம்மையார், பட்டினத்தடிகள், சேக்கிழார், மெய்கண்டார், அருணகிரிநாதர், தாயுமானார், நீலகண்டர், சைதன்யர், நம்மாழ்வார். இயேசுநாதர் ஸெயிண்டு, பால், ஸெயிண்டு பிரான்லிஸ் ஆப் அஸ்ஸி முதலிய பெரியோர்களும் இவர்கள் போதனையைப் பின் பற்றி நடந்த ஆயிரக் கணக்கான சான்றோர்களும்

ஆன்மாக்களாகிய நமக்குத் தலைமை விதித்து ஒரு பரம் பொருள் இருக்கின்றது என்றும் அதை அடைதற்குரிய வழிகளைத் தேடும் பொருட்டே நாம் மனிதராய்ப் பிறந்திருக்கிறோமென்றும் ஒருங்கே கட்டுரைப்பார்களானால் அவர்கள் சொல்லுகிறதைக் கொள்ளுவதர் அல்லது தள்ளுவதா? யோசித்துச்சொல். இவர்களிற் சிலரது சரித்திரங்களாவது உனக்குத் தெரிந்திருக்கலாம். அவர்களைப் பொய்யர்களென்றாவது, வஞ்சகர்களைன்றாவது, நம்போலியரை விடச்சமய அறிவு அநுபவங்களில் மிக முதிர்ந்தவர்களல்லர் என்றாவது, ஈசவர ஞானம் சிறிதேனும் பெறாதவர்கள் என்றாவது ஒதுக்க நியாய முண்டா? இப்போது சில பெரியோர்களையே நான் குறித்தேன். இன்னும் எத்தனையோ பேர்கள் இருந்தார்கள் இன்னும் இருக்கிறார்கள்.

**சுந்தரம்:** - (சிறிதுநேரம் மௌனமாயிருந்தபிறகு) சிவஞானம், இது வரையில் மனதை இவ்வழிகளில் செலுத்தினதில்லை. நீ சொல்பவைகள் புதியவையாய்க் காணப்பட்டாலும் உண்மை என்றே தோன்றுகின்றன. இப் பெரியோர்களை வஞ்சகர் அறிவிலிகள் சாமானியார் என்று சொல்ல என்னா வெழாது. ஏதோ Comfortable ஆய் (சுகமாக உண்டு உடுத்து உறங்கி) உலகில் வாழவேண்டு மென்னும் ஒரே நோக்கத்தோடு பொருள்தேடி சமயத்தைப்பற்றிக் கவலையின்றிக் காலங் கழித்த எனக்கு இப்பெரிய வியஷகளைப்பற்றிப்பேச உரிமையேது? கடவுள் கிருபை பெற்ற பெரியோர்கள் தன்மையை சற்றும் தெரிந்து கொள்ளாமலே சாமானியர் செய்யும் குற்றங்களை அப்பெரியோர் மேல் சுமத்திச் சமய நிந்தனை சாத்திர நிந்தனை செய்தேன். மேற்றிசை நாகரிகம் சர்வோத் கிருஷ்டமான தென்று உலகவழியிலேயே என்புத்தியைச் செலுத்திப்போது போக்கினேன். இப்படிச் சாலநாள் போககினதை நினைக்க மனம் திடுக்கிடுகின்றது, இனியாயினும் நன்னெறி கடைப்பிடிக்க முயல்கிறேன். என்னுயிர்த் தோழனாகிய நீயே எனக்குக் குருவாகவு மிருந்து உன்னாலியன்ற மட்டும் எனக்குதவி செய்ய வேண்டும்.

**சிவஞானம்:** - என்மனதிற் கிசைந்த அன்பனே! நாயினுங் கடையேனாகிய என்னால் என்ன ஆகும். எல்லாம் திருவருட்செயல். உன்மன மிவ்வளவு விரைவாகச் செம்மைநல மறிந்து மேலைத்தளவினாலும் உனது அதிதீவிர பக்குவத்தினாலுமேயாம். "உடுக்கை இழந்தவன் கைபோலவாங்கே இடுக்கண்களைவதா. நட்பு" என்றார். திருவள்ளுவர். சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய நாயேனை நீ நன்னெறி சார்வதற்குக் கருவி யாகத் திருவருள் எப்படி இயக்குவித்தாலும் எனக்கு உவப்பே. என்னால் உனக்கு ஆகக் கூடியது என்ன?'

**சுந்தரம்:** - பெரியோர்கயெல்லாம் ஒரு முகமாகப் போற்றுகின்ற கடவுள் எப்படிப் பட்டவர், அவரைப்பற்றி அவர்கள் என்ன சொல்லுகின்றார்கள்? விளக்கமாக அறிவிக்க வேண்டும்.

**சிவஞானம்:** - கடவுள் இப்படிப்பட்டவர் தான் என்று வரையறுத்துச் சொல்லமுடியாது, ஞானிகள் கடவுளை,

"சொல்லுக் கடங்காச் சுகப்பொருள்"

"உரை மனமிறந்து நின்ற ஒருவன்"

"மாற்ற மனங்கழிய நின்ற மறையோன்"

"இன்ன தன்மைய னென்றறியாச் சிவன்",

என்பன போன்ற எண்ணிறந்த சொற்றொடர்களால் துதித்திருக்கின்றார்கள், ஆனால் அவர்களே..

**சுந்தரம்: -** என்ன கஷ்டமிது! கடவுளையடைய வேண்டுமென்று மனிதன் விரும்புவது எளிதல்ல. அப்படிப்புறப்பட்ட ஒருவனை “கடவுள் மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதவன்" என்று சொல்லிப் பயமுறுத்தினால் அவன் போம் வழியென்ன? நமது மனதிக்கும் வாக்கிற்கும் எட்டாமல் ஒருபொரு ளிருக்கிறதென்றால், அது இருப்பதும் இல்லாததும் நமக்கொன தானே, அக்கடவு ளைப்பற்றி ஒன்றுந் தெரியாது சொல்லவு முடியாது என்றால் அதையடைய (Try) அ அ: - முயற்சி செய்வது, கம்பர் வர்ணித்த மராமரங்களின் கீழ் இளைப்பாறிப் போகும் சூரியனது குதிரைகளின் கொம்புகளை முழம் போடப்போன கதையாய் முடியுமே.

**சிவஞானம்: -** உண்மையறிய வேண்டுமென்னும் ஆவலானது உன்னை அவசரத்தின்பாற் படுத்திவிட்டது. இறைவனைப் பற்றி முன் குறித்தது போலப் பேசிய பெரியோர்களே அவனை யடையக்கூம். அது அரிதில் முடிவதொன்றே யல்லது முற்றிலும் கைகூடாத காரியமல்ல என்று கட்டுரைக்கின்றார்கள். அவன் ‘செலஅரி' தானவன் ஆனால் அவனே தான் செல்கதியா'யுள்ளவன். அவனுடைய திருவடிகள் சிந்திப்பரியன எனினும், 'சிறந்து செந்தேன் முந்திப்பொழிவன முத்திகொடுப்பன மொய்த்திண்டு பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன" எழுவாயிரு வாயிலா. தன எங்கள் பிணி தவிர்த்து, வழுவா மருத்துவமாவன மாநரகக் குழிவாய், விழுவாரவர் தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்க அன்போடு அழுவார்க் கமுதங்கள் காண்க."
(சிவஞானம் சிறிதுநேரம் அசைவற்று நின்றான். பிறகு சொல்கிறான்) அன்பனே ! பரமனைக் கேவலம் நம்முடைய அறிவினாலேயே காணலாம் எனத்தருக்குவோர் அவனை யடையப்பெறார் என்பது திண்ணமே. ஆனால் உடல் பொருள் ஆவிமூன் றனையும் சிவனதுடமைகள் என எண்ணி, மாதேவன் பற்றலால் மற்றுப்பற்றின்றி. நிற்கும் அன்பர்களது “பக்திவலையிற் படுவோன்தான்.” "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்" அல்லார்க்கோ அரியன். “கனியினுங்கட்டி பட்டகரும்பினும், பணிமலர்க்குழற் பாவைநல்லாரினும், தனிமுடிகவித்தாளு மரசினும் இனியன்றன் னடைந்தார்க்கிடை மருதனே" என்றார் வாகீசர். "அடைந்தவர்க் கமுதாயிடுவான்" என்றார் சுந்தரர். இவரே "இன்ன தன்மைய னென்றறிவொண்ணா வெம்மானை எளிவந்தபிரானை" என்றும் அருளிச்செய்தார். அன்பர்கட்காக இறைவன் பிச்சையெடுப்பன், தண்ணீர் ப்பந்தல் வைப்பன், வில்லடி பிரம்படி செருப்படிபடுவன், மாமிச முண்பன், வாய்நீரைக் கங்கையெனக்கருதுவன், குடுமியிற்செருகிய

பூவையும் உவந்து அங்கீகரிப்பன். இறைவனது அருளின் திறம் இருந்தவா றென்னே! அதைமதிக்க என்னாலாமோ? "தேடிக்கண்டுகொண்டேன் திருமாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனை யென்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்" என்னும் அன்புருவாய பெரியாரது திருவாக்கை உன்னிப்பார்.

**சுந்தரம்: -** இந்த அடியார்களும் மனிதர்கள் தானே, அவர்க்குமாற்திரம் கடவுள் அகப்பட்டு விடுகிறானே, இது முன்சொன்னதோடு மாறுபடாதோ?

**சிவஞானம்: -** அவர்கள் சீவ அறிவைக்கொண்டு இறைவனைக் காணவில்லை; அகப்பற்று புறப்பற்றுகளைத் துறந்து சீவபோதத்தைத் தொலைத்து அவனருளே கண்ணாகக் காண்கின்றனர்." அவனருளாலே யவன்றாள் வணங்கு" கின்றனர். இவ்வுண்மையை நோக்கில் நீகுறித்த மாறுபாடு மாறுபடும்.

**சுந்தரம்: -** இப்படித் தன்னன்பர்கட்கு ஓர்விதமாகவும்மற்றவர்க்கு வேறொரு விதமாகவும் தோன்றுவது மிக்க ஆச்சரியமே. இருக்கட்டும், ஞானிகள் கடவுளைப் பற்றிச் சொல்வதில் (Essential) ஒய்......... சாரமாய் உள்ள விஷயங்களைத் திரட்டி இரண்டொருலக்ஷணங்களாகச் சொல்ல இயலாதோ? என் போன்றவர்களுக்குத் தெளிவை உண்டாக்குவதற்கு அதுதான் வழியென்று காண்கிறது.

**சிவஞானம்: -** ஆன்றோர் அப்படியும் செய்திருக்கின்றார்கள். இறைவனைப்பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டிய உண்மைகளியாவும் சச்சிதாநந்தன் என்னும் சொற்றொடரிற் பொதிந்திருக்கின்றன. கடவுள் தோற்றக் கேடுகளில்லாது என்றும் உள்ளவன். சூனியமன்று "அங்கிங்கெனாதபடி எங்கும்பிரகாசமாய் இருப்பவன்" அவன் நம்மைப்போலச் சிற்றறிவுடையவனாகாது "பிரக்ஜாநம் பிரஹ்மம்" என்றபடி பெரிய ஞானமென்னும் முற்றறிவை இயற்கையாகவே உடையவன். அன்றியும் அவன் "வேண்டுதல் வேண்டாமையிலான்" ஆதலினாலே அவன் நம் போன்று இன்ப துன்பங்களை நுகர்ந்து உழல்பவனல்லன். அவன் குறைவிலா நிறைவின தாகிய பேரானந்த முடையோன். ஆகவே கடவுள் என்றும் எங்கும் உள்ளவனென்பதும் அவன் ஞான ரூபி, ஆனந்தவடிவன் என்பதும் பெற்றோம். மெய்யடியார்கள் சொல்லியவற்றை இன்னும் நன்கு ஆராயுமிடத்து இறைவனது ஆனந்தமானது தன்னைத்தானே நேசித்துக்கொள்வதால் உண்டாவதன்று. இவன் இன்பவடிவனாய் இருப்பதுடன் "அன்பேசிவம்" என்னவும் விளங்குகின்றான். மெய்வருதெளிவிலவனை, வெளிப்படவுணர்ந்துளோ ராகிய அன்பர்களது அத்துவித நிலையில் அவர்க்கு இன்பமேயாக இலங்குகின்றான். இதனால் தான் அவனை ஆனந்தன் என்று சொல்லுகிறோம். இதன்றி முத்தான்மாக்கள் அவனிடத்து 'இன்பமே என்னுடையன் பே' என்னக் கூடிய நிலையில் நின்று அன்பு செலுத்துவது போல், அவன் சீவ கோடிகளிடத்துத் தனது வரம்பிலாப் பெருங்கருணையைச் செலுத்துகின்றான். அரன் நம்பிறப்பிலாப் பெம்மான், "பேரருளாளன்" அவன் நம்முடைய அன்பிற்கு உரியவனாதல்போல், நாம் அவனுடைய அருளிற்கு உரியவர்கள். ஆகவே பேராற்றலும், போ றிவும் உடையவன் பரமன் என்பதும் அவன் சிற்றறிவும் அற்ப

ஆற்றலுமுடைய நம்மை நேசிக்கின்றான் என்பதும் வெளிப்படும். அம்மட்டோ ! நமது குறைவும் போக்கித் தனது நிறைவால் - நம்மைப் புனிதராக்கித் தன்னோடு ஒன்படுத்திக் கொள்ளுகின்றான். “ஆணவத்தோ டத்து விதமான படி மெய்ஞ்ஞானத், தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளென்னாளோ" என்று தாயுமானார் குறித்தது மிந்நிலையினையே. இவ்வுண்மையை நோக்கில் இறைவனுக்கும் நமக்கும் அதிக நெருக்கமான உறவு உள்ளதென்பது புலனாகும்.

**சுந்தரம்: -** நல்லது. இதில் ஒரு doubt... சந்தேகம் கடவுள், 'நம்மைப்போல் இன்பதுன்பங்களை நுகர்ந்துழல்பவனல்லன்' என்று முன்பு சொன்னீர். பிறகு நாம் நல்வயொழுகித் தன்னோடு சேரவேண்டுமென்னும் திருவுள்ள முடையோன் என்றீர். இப்படி நம்பொருட்டுக் கவலை எடுத்துக் கொள்வனானால் இறைவன் எப்படி முடிவிலா ஆனந்தமயனாய் நிற்கமுடியும்?

**சிவஞானம்: -** நமக்கு இன்பதுன்பங்கள் விளைவதெல்லாம் நம்மறிவின் குறுக்கக் காரணமாக உலகப் பொருள்களிடத்து எழுகின்ற விருப்பு வெறுப்புகளினாலேயே. இறைவனே, வேண்டுதல் வேண்டாமையிலாத முற்றறிவினன், அவன் ஈவதறிவனே யல்லது ஏற்பதறியான். கைம்மாறு வேண்டாது உதவும் பேராற்றலுடைய வள்ளல். எண்ணமாத்திரையானே எல்லாஞ் செய்யவல்லான் ஆன்மகோடிகளைத் தன் திருவடியை யடையச்செய்யு முறையை நன்குணர்வான் ஆதலின் அவனுக்கு கவலையேற்பட இடமில்லை.

**சுந்தரம்: -** இறைவன் நமக்கு எப்படி உதவி செய்கின்றான் என்பதைச் சாஸ்திர வழியால் அறிய விரும்புதும்.

**சிவஞானம்: -** மிக நல்லதே! ஒவ்வொரு ஆன்மாவும் எண்ணிலாத நெடுங்காலத்திற்கு முன்பு அறிவும் தொழிலும் விளங்காமல் அஞ்ஞானமாகிய இருட்டுள் கட்டுண்டிருந்தது. இந்த நிலையைக் கேவலா வஸ்தை என்று சாஸ்திரங்கள் சொல்லும். இப்படிக் கிடந்த ஆன்மாவை நல்வழியிற்புகுத்தித் தன்னோடு சேர்த்துக் கொள்ளவிரும்பும் இறைவன், மிக நுண்ணியதாயுள்ள சடப்பொருளால் (மாயை matter) (1) உடம்பு, (2) மனம் முதலிய அகக்கருவிகள், (3) அவைகளோடு வசிப்பதற்கு ஒரிடம் (4) நுகர்வதற்குரிய போகம் என்னு மிவற்றைத் தோற்றுவித்து ஆன்மாவிற்குக்கொடுக்கின்றான். இதைத்தான் ஈசன் மாயையை முதற் காரணமாகக் கொண்டு தனுகரண புவன போகங்களை உண்டாக்கிக் கேவலாவஸ்தையிலிருந்து ஆன்மாக்களைச் சகலாவஸ்தையிற் புகுத்துகிறான், என்று சாத்திரங்கள் சொல்வது. இப்படி ஆன்மா உடம்பு முதலியவற்றோடு சேருங்சாலத்து அதற்கு அறிவும் செயலும் சிறிது சிறிதாய் உள்ளது சிறத்தல் என்னும் விதியையொட்டிக் கூறுகின்றன. முன்றன. எப்படியெனில் சகலாவஸ்தையில் உழன்று, நல்வினைத் தீவினைகளைச் செய்து, அநேக பிறவிகளெடுத்து பலவேறு வணப்பட்ட இன்ப துன்பங்களையும் நுகர்ந்து வரவர ஆன்மாவிற்கு நல்லறிவு துலக்க முறுகின்றது, பகுத்தறிவும் முறுகிவளர்கின்றது. அதாவது ஆன்மா 'நல்லது இது கெட்டது' என்றும் 'நிலையுள்ளது இது நிலை

இல்லாதது' என்றும் 'உண்மையின் பத்தைத் தருவது இது தாரதது இது' என்றும் அறிகின்றது. அதோடு நல்லொழுக்கமும் நற்குணமும் வளரும். இதனால் ஆன்மாவானது மாயையின் காரியங்களாகிய உடம்பு முதலியவற்றால் பல உலகங்களிற் சென்று நுகரும் இன்பங்கள் தாழ்ந்தன என்று உணர்ந்து ஒதுக்கித் தன்னுடைய தலைவனாகிய ஈசனது கூட்டுறவைப் பெற்று அவனோடு கலந்து நிற்கப் பாடுபடும். இறைவனோடும் அவன் தெண்டர்களொடும் கூடவேண்டும் என்று ஆன்மாவானவன் உண்மையாய்க் கதறுகின்ற போது ஈசன், "பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து" அவ்வான்மாவினது பரிபாகத்திற்கு ஏற்பக் குருவடிவம் தாங்கிவந்து தன் கூட்டுறவால் பெறும் பேரின்பத்தையடைவதற்கு வேண்டிய சூக்ஷ்மமான வழியை உபதேசிப்பான். அவ்வழி நின்று ஆன்மாதேகத்தோடு கூடி உலகத்திலிருந்தாலும் தாமரையிலேயில் தண்ணீர் போல் உலகப் பொருள்களிடத்துப் பற்றொன்றும் வையாது "கந்தைமிகையாம் கருத்தோடு" இறைவனது திருவடிப் பற்று ஒன்றையே பற்றிக்கொண்டிருந்து சீவன் முத்த னென்றும் பேர் பெற்று உலகத்தால் மாசடையாமல் தன்னை யடைந்த பிறஉயிர்களைப் புனிதப்படுத்திக் கொண்டு சிவானந்தம் அநுபவித்ததேகம் பிறகு அச்சிவமேயாய்விடும். இவ்வண்னம் பாசத்தோடு கலப்புற்றிந்த ஆன்மா பதியோடு ஒன்றி முத்தியடைகின்றது. நான் இப்பெரிய விடயத்தை மிகத்தொகுத்துச் சொன்னேன். இன்னும் இதில் அநேக கருத்துகள் நுனித்தறியக் கிடக்கின்றன, அவைகளை நீ நூலராய்ச்சியினால் அறிய வேண்டும்.

**சுந்தரம்: -** தாங்கள் பேசிவருகையில் யான் இதுவரையில நுபவித்திராத ஒருவிதமான (Feel) உள்ளநெகிழ்ச்சி என்பால் நிகழ்ந்தது. இப்போது என் மனதைப் பயமும் கழிவிரக்கமும் நையச்செய்கின்றன ஏதேதோ எண்ணங்களெல்லாம் தோன்றி மறைகின்றன. என்செய்வேன், இத்தனை வருடங்களாக யான் நம்பியதும் செய்து வந்ததும் சிறுபிள்ளை விளையாட்டாக முடிந்து விட்டது. உலகமே சதமென்றிருந்த எனக்கு அது பெருந்தவறு என்று படுகின்றது. யான் பிறந்தது முதல் இதுவரையில் உண்டு உடுத்தி உறங்கிச் சிற்றின்பவழியிற் கிடந்தேனே தவிற ஆத்மலாபத்தைக் குறித்து ஒன்றுஞ்செய்ததாக எனக்குத் தோன்றவில்லை. என்னைப்போலத் தங்களையும் ஒருவீணனென மதித்துப்போதுபோக்கிப் போகவந்த எனக்கு, மனவிருளை ஓட்டும் ஞானத்தீ கிடைத்தது நல்வினை. இது இறைவனது திருவருட் செய்கைபோலும். நான் கடைத்தேறுவதற்குச் செய்ய வேண்டியதென்ன? முதலாவது நான் நான் என்ற சொல்லிற்கே பொருள் தெரியவில்லை. விடுமுறை நாள் முழுவதும் தாங்கள் அநுமதிதந்தால் தங்களிடத்தேயே நின்று அவ்வப்போது நிகழ்கின்ற சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்து இனியாவது நல்லவனாக முயல்வேன். சம்மத மெப்படியோ?

**சிவஞானம்: -** சுந்தரம்! யான் உனது நண்பனே யல்லது அந்நியனல்லனே. ஏன் வித்தியாஸமாய் எண்ணுகிறாய்? உன்னால் எத்தனை நாள் சென்னையிலிருக்கக் கூடுமோ, அதுவரையிலும் நீ இங்கேயே சுகமாக இருக்கலாம். நமது கடவுள் அன்புவடிவினன். அவனை அடைய ஒருவனுக்கு விருப்பப் இருந்தால் அவனும் அன்பை வளர்க்கவேண்டும். உண்மை இப்படி இருக்க உனக்கு நான்

இவ்வற்ப உதவி செய்யாவிட்டால் அடியேன் இறைவன் திருவருளுக்கு அயலாய் விடுவேனல்லவோ? இவ்வில்லம் உன்னுடையதே என்று நினைத்துத் தங்கியிருக்கலாம். (மணிபதினொன்றடித்தது). பதினொன்றாய் விட்டதா! இன்று பொழுது நன்றாய்க் கழிந்தது. புனிதவதி: அப்பா! ஸ்நானத்திற்கும் பூஜைக்கும் எல்லாந் தயாராயிருக்கிறது.

**சிவஞானம்: -** இதோ வருகிறோம். அம்மா! சுந்தரம் தயை செய்து ஸ்நானம் செய்ய எழுந்திருக்கவேண்டும். போசனமுடிந்த பிறகு நாம் இன்னொரு முறை நல்ல விஷயங்களைப்பற்றி சம்பாஷிக்கலாம். (இருவரும் போகின்றனர்)

**சிவஞானம்: -** தனது சிவபூசையை முடித்த பின்பு, ஸ்நானம் செய்து விட்டு ஆழ்ந்த ஆலோசனையைக் காட்டும் முகத்தனாய் உலாவிக்கொண்டிருந்த சுந்தரத்தை அன்போடு உடனழைத்துக்கொண்டு உண்ணுமிடம் அடைந்து விதிப்படி சமைக்கப்பட்ட ஸத்வ உணவை தன் நண்பனுக்கு இன்சொல்லோடும் இனிய முகத்தோடும் அருந்தித்தானும் உண்டு பின்னர் இரங்கூன் முதலியாருடன் கல்வியறை சேர்ந்தார். சிறிது நேரம் இளைப்பாறியதும் சுந்தரம் பின்வரும் சம்பாஷனையைத் தொடங்கினான்.

**சுந்தரம்: -** உலகத்தில் நிகழ்வனவற்றைப் பார்க்கும் போது, சற்றேறக்குறைய எல்லா மனிதரும் உண்ணுந் தொழிலைத்தான் மற்றவற்றினுஞ் சிறப்பாகக் கொண்டு பாடுபடுவதாகத் தெரிகிறது.

**சிவஞானம்: -** அதிலென்ன தடை இப்போது நீ உரைநடையில் சொன்ன உண்மையையே உலகம் இப்படிப்பட்டதென்று செவ்வையாய் அறிந்த ஸ்ரீதாயுமானார் "பொய் திகழும் உலகநடை என் சொல் கேன் என் சொல்கேன் பொழுதுபோக்கு ஏதென்னிலோ, பொய்யுடல் நிமித்தம் புசிப்புக்கலைந்திடல் புசித்தபின் கண்ணுறங்கல், கைதவம லாமல் இது செய்தவமதல்லவே" என்றும் "எல்லாம் யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்" என்றும் உண்மையும் அழகும் பொருந்தப்பாடியருளினார். இவ்வாறே முற்றத்துறந்த முனிவர் பெருனாமாகிய பட்டினத்தடிகளும் உலகத்தார் நிலைமையைக் குறித்து "முப்போதும் அன்னம் புசிக்கவும், தூங்கவும், மோகத்தி னால் செப்போது இளமுலையாருடன் சேரவும் சீவன் விடும்போது கண் கலக்கப்படவும் அமைத்தாய் ஐயனே" என்று இரங்கிங் கூறினார்,

**சுந்தரம்: -** இத்திருவாக்குகள் என்போன்றார் நிலைமையை clear நன்றாக describe வர்ணிக்கின்றன, அம்மம்ம! இதென்ன இவ்வழக்கம் பெருஞ்சனியனாயிருக்கிறது! தமிழ் பேசும்போது தமிழ்ச்சொற்களையே ஆளவேண்டும் என்று தாங்கள் பேசும் முறையாலேயே எனக்குச் சொல்லாமற் சொன்னீர்யானும் கூடியவரையில் try முயன்றும் ஆங்கில பாடச் சொற்கள் என்னை விடமாட்டேனென்கின்றனவே. பழக்கங் கொடியது தான்..

**சிவஞானம்:** - அதற்காக அதிக கவலைப்பட வேண்டாம் ஒரு பழக்கம் எத்தனை காலந்தான் நம்மிடங் குடிகொண்டதாயிருந்தாலும் அதை தமது முயற்சியினாலும் கடவுள் அருளினாலும் நாளடைவில் மாற்றி விடக்கூடும் என்பது திண்ணம். ஏன் எண்ணில்லாத பிறவிகளிலெல்லாம் தோன்றி நிலைத்து வளர்ந்து வருவதாகிய உலகவாஸனை, தேகவாஸனை, சாஸ்த்ரவாசனை என்னும் மூன்று பெருங்கொடும் பழக்கங்களையுங்கூட ஆன்மாக்கள் வேண்டிய அளவு பாடுபட்டால் நின்மலனாகிய பரம்பொருளினது திருவடிப்பற்று என்னும்பழக்கத்தை முதிபச்செய்து கொண்டு அதனால் ஒரே பிறவியில் இத்தொன்மையான பழக்கங்களையும் அறவே ஒழித்து விடுதல் செய்யக்கூடியதே என்று அறிந்த பெரியோர் கட்டுரைக்கின்றார்கள். ஆதலால் நாம் மனஞ் சோர்ந்துவிட வேண்டுவதில்லை.

**சுந்தரம்:** - இருக்கலாம் ஏதோ ஆன்மா ஆன்மா என்கின்றோமே அது எது, எப்படிப்பட்டது என்பதைப் பற்றித்தான் கேட்டறிந்து கொள்ள எண்ணிப் பேசத்தொடங்கினேன். ஆன்மா என்பதைப் பற்றிய உண்மைகளை எனக்குத் தயை செய்து விளக்கவேண்டும். எனக்கு இப்போது அந்தச்சொல்லில் மூன்று எழுத்துக்கள் இருக்கின்றன என்பதைத் தவிர வேறொன்றும் திடமாய்த் தெரியவில்லை.

**சிவஞானம்:** - எனக்கும் நேர் நிகழ்ச்சி முறையில் திண்ணமாகத் தெரிந்துள்ளது அற்பமே, தன்னைத்தான் உணர்தல் எளிதில் கைவரக் கூடியதல்ல, உரிய முயற்சிகள் செய்து ஆன்மாக்கள் தம்மை உணர்வாராயின் “தமையுடைய தன்”னையும் (அதாவது ஆன்மநாயகனாகிய கடவுளையும் எளிதில் அணுகி உணர்வார். இவ்வுண்மையை 'ஆத்ம தரிசனம் பெற்ற உடன் சிவதரிசனம் கிடைக்கும்' என்று அநுபவஞானிகள் சொல்லுவர். ஆன்ம இயல்பை உ.ணருதல் இத்துணைச் சிறப்புடையது. ஆகையால்தான் அது நம்மமனோர்க்குக் கடினமாகத் தோன்றுகின்றது. ஆயினும் நம்மறிவினால் நணுகியாராயின் நம் இயல்பு இன்னதென ஒரு சிறிது விளங்கும். இதனோடு அநுபல ஞானிகளாகிய முதுமக்கள் நமக்குத் துணையாய் நிலவும்படி கட்டளையிட்டருளிய நூல்களைத் தக்கார் வாயிலாகக் கேட்டுச் சிந்திப்போமாயின், மேலுந்தெளிவு பிறக்கும். இவ்வண்ணம் சுருதி, யுக்தி என்னும் இரண்டினால் ஆன்மா இப்படிப்பட்டதென அறிவளவாகவாவது தெரிந்து கொள்ளல் பலருக்கும் சாத்தியந்தான்.

(உலகமயநாயுடு B. A, அவர்கள் சிவஞானத்தைக் காணவருகிறார்)

**உலகம்:** - ஹாலோ! குட்பை!

**சிவஞானம்:** - நாயுடு அவர்கள்! வாருங்கள்; நிரம்பசந்தோஷம், கண்டு நெடுநாளாயிற்று. இதோ நாற்காலியில் உட்காருங்கள்.

**உலகம்:** - தேங்க்ஸ். தேங்க்ஸ்

(இரண்டு மூன்று நிமிஷங்களில் குசலம் வினாவியாயிற்று உள் குப்பாயமும் (Shil't) நஜாரும் தரித்து, ஒட்டிக்கத்தரிக்கப்பட்ட தலை மயிரின் மீது மூன்று பொட்டும் முகத்தில் மூன்று புண்டரமுமாக வெண்ணீறு அணிந்து காலில் மேல் சோடுமின்றிக் கைகட்டி அமைதி யோடிருக்கும் நமது நண்பர் சுந்தரமுதலியாரை நாயுடு அவர்கள் உற்று நோக்கினார்.)

**சிவஞானம்: -** இவர் இரங்கூனிலுள்ள ஒரு பெரிய ஐரோப்பிய வாணிப சாலையில் உயர்ந்த அலுவல் பார்ப்பவர். விடுமுறை எடுத்துக்கொண்டு சென்னைக்குச் சிலநாளாக வந்துள்ளார். இவரும் நானும் முன்பு ஒருசாலை மாணவர்களாகப் பல ஆண்டுகள் வாசித்தோம், சுந்தர முதலியார்! நமது நண்பர் உலகமய நாயுடு அவர்கள் சடப்பொருள் நூல்களை நிரம்பக்கற்று பி. ஏ. பட்டம் பெற்றுள்ளவர். ஒரு கல்லூரியில் உபந்யாஸகராக இருப்பவர் : (உலகமய நாயுடுவும் சுந்தரமும் ஒருவரையொருவர் அறிந்து கொண்டதைத் தக்கவாறு வெளிப்படுத்தினர்.)

**உலகம்: -** நீங்களிருவரும் ஏதோ கன்வெர்ஸ் பண்ணிக் கொண்டு (பேசிக்கொண்டு) இருந்தீர்கள், நான்' மிடிலி'ல் (இடையில்) 'இண்டர்ரப்ட்' (தடைசெய்ததற்காக என்னை 'எக்ஸ்க்யூஸ்' பண்ண (மன்னிக்க) வேண்டும்.

**சுந்தரம்: -** ஓ! கோ....! இல்லை : அப்படி ஒன்றுமில்லை. ஏதோ ஆன்மா என்று சொல்லுகிறோமே அதெப்படிப்பட்டதென்று பிள்ளை யவர்களைக் கேட்டேன்; அதைப்பற்றி அவர் சொல்லிக்கொண்டிருந் தார்.

**உலகம்: -** பாஷ்! (பைத்தியம்) ஆன்மா என்று ஒரு எண்டிடி (உள் பொருள்) இருந்தாலல்லவோ அதைப்பற்றி, டாக் (பேச்சு) உண்டு. நானும்பல ஸைன்ஸுகளை (உலக நூல்களை) 'ஸ்டடி பண்ணினேன்'(ஆழ்ந்து படித்தேன்); உடம்புக்கு வேறாய் அப்படி ஒன்றிருக்கிறதா கக்காணப்படவில்லை.

**சுந்தரம்: -** இருக்கிறதாகப் பெரும் பாலார் நம்புகிறார்களோ?

**உலகம்: -** நம்பிக்கைக்கு என்ன குறைச்சலா? ஸையிண்டிபிக் காய் போதிய அளவு சான்றிருந்தாலல்லது எதையும் நம்பலாகாது என்னும் கொள்கையோடு பிடிக்காதவர்கள் தான் அப்படிச் சொல்வார்கள். நம் 'தேசத்தில் வழங்கும் பல கொள்கைகள் கர்நாடகப்பைத் தியங்களே தவிர வேறல்ல.

**சுந்தரம்: -** நல்லது எனக்கு இவ்விஷயத்தைத் தீரவிசாரித்து உண்மையறிய ஆசையுண்டு, தாங்கள் தயை செய்து எந்த நியாயங்களால் (ஸையன்ஸ்) தேகத்திற்கு வேறாக ஆன்மா இல்லையென்று பல பெரியோர்கள் கொள்கைக்கு மாறாகச் சொல்லுகிறது என்பதை விளக்கவேண்டுகிறேன். (இதற்குள் புனிதவதி சிவஞானத்தின் கண்ணுக்குத்தெரியுமாறு ஒதுங்கி நின்றாள். குறிப்புணர்ந்த பிள்ளை நாயுடு அவர்களைக் கேட்டுத் தெரிவித்தபடி நல்ல நீர் கொணரப்பட்டது. நாயுடுவும் நீர் அருந்திப்பேசத்தொடங்கினார்)

**உலகம்: -** 'ஸையிண்டிபிக்காய்' ஆராய்ச்சி செய்கிறதில் மேல் நாட்டார் தான் சிறந்தவர்களாயிருக்கிறார்கள்.

அவர்கள் மிகுந்த ஜாக்கிரதையோடு கண்டுபிடித்து மறுக்கமுடியாதபடி 'ப்ருவ்பண்ணி' (மெய்யென நாட்டி) உள்ளவைகளை இப்போது சொல்கிறேன், நமது 'தாட்ஸ்', 'பீலிங்க்ஸ்', 'ஏக்ஷன்ஸ்' (அறிவு, விருப்பு, தொழில்) என்பவைகளை நீக்கிவிட்டால் 'நான்' என்பது கிடையாது ஆனால் இவைகள் எல்லாம் நமது மூளையின் சாம்பல் வர்ணமுள்ள ஒருபாகத்தினால் உண்டாக்கப்படுகின்றன. மூளை ('உம்காஸ்') (காரணமும்) நான் அல்லது ஆத்மா என்பது எபெக்ட் உம் காரியமும் யுள்ளன.

**சிவஞானம்: -** அப்படியா! உலகம் : - அதற்கென்ன டௌட் (ஐயம் :)? ஒரு சிறு குழந்தையை நோக்குவோம்; அதன் மூளை ரொம்ப அன்டெவெலப்டாய் (வ்ள ராமல்) இருக்கிறது. அதற்குச் சரியாகவே அதன் அறிவும் சுருங்கி இருக்கிறது, அக்குழந்தை பாலப்பருவந்தாண்டி முழுமனிதப் பருவத்தை அடையும்போது அதன் ப்ரெயினும் (மூளையும்) நாளுக்கு நாள் ஸைஜிலும் (பருமனிலும்) இண்டெர்னல் ஸ்டாக்சரிலும் (உள் அமைப்பு களிலும்) வளர்ந்து கொண்டே வந்து உயர்ந்த கண்டிஷனை (நிலைமையை அடைகிறது பிறகு ஒல்ட்ஏ ஜ் (கிழப்பருவம்) முதிரமுதிர (மூளையின் வலுவும் குறைந்து கொண்டே போகிறது. ஸைமல் டேனியஸாய் (அதோடுகூடவே) தாட்பருவம் (அறிவின் ஆற்றலும்) குறைந்துகொண்டே வருகிறது. இதனால் ப்ரெயின் தாட்டுக்குக்குக் காஸ் என்று ஏன் கன்க்ளூட் பண்ண ((முடி புகட்டக்) கூடாது, பர்தராய் (இன்னும்)

**சுந்தரம்: -** நண்பரே! தங்களிடம் ஒரு விண்ணப்பம். குறுக்கே பேசுவதற்காக என்னைக் கோபித்து வெறுக்கக்கூடாது, தாங்கள் தமிழில் இப்போது பேசிவருகிறீர்கள், கல் கொண்டு அடிப்பது போல் அடிக்கடி ஆங்கில சொற்களைப்புகுத்திச் செவியைப் புண்படுத்துவது எதற்கோ? இந்தக்கொடிய பழக்கம் இக்காலத்தில் ஆங்கில வாஸனைனகை சிறிதறிந்தவர்களிடமெல்லாங் காணப்படுகிறது இப்பித்து என்னையும் இன்றுவரையில் பிடித்திருந்தது. சிவஞானத்தின் தொடர்பு கிடைத்த அளவில் அம்மயக்கங்குறைய ஆரம்பித்தது, சற்று உற்று நோக்குவார்க்கு இச்செய்கைமிகவும் அருவறுக்கத் தக்கதாய்த்தோன்றுமென்று அறிந்தேன். தாங்கள் சொல்லிவரும் பொருளில் மனம் - அழிந்திநிற்றலை இடைப்புகுத்திய ஆங்கில பாடையேற்றம் தடுத்துக் கொண்டேவந்தது, ஆதலால் தான் இவ்விண்ணப்பஞ்செய்து கொள்ளத்துணிந்தேன், மன்னிக்கவேண்டும், இக்குற்றத்தை அகற்றுதல் தங்களுக்கு எளிதில் கூடும் என்று கண்டுகொண்டேன்., இனித்தயை கூர்ந்து எடுத்துக்கொண்ட பெரிய விஷயத்தைப்பற்றி மேலும் விரித்துரைக்கக் கோருகிறேன்.

(**சிவஞானம்: -** புன்னகை யோடிருந்தார்.)

**உலகம்:** - வெரி வெல்... உம்.... ரொம்பசரி, நீர்சோன்னது உண் மைதான். அதன்படி நடக்க முயல்கிறேன். என்ன பேசிக்கொண் டிருந்தது? ஆம். மூளையின் வளர்ச்சி தேய்வுகளும் அறிவின் வளர்ச்சிதேய்வுகளும் ஒத்து இயங்குகின்றன என்பதைக்கண்டோம். இன்னும் சொல்லுகிறேன் : நல்ல நிலைமையிலிருக்கும் ஒரு மனிதன் கூட கள்சாராயம் இவைபோன்றவைகளைக் குடித்தானாயினும், க்ளோரபாரம்' என்னும் பெயரிய மூர்ச்சிக்கு மருந்தை மோந்தானாயினும் சிறிது நேரத்திற் கெல்லாம் தன்னறிவைத் தான் இழந்து விடுகின்றான். இதெப்படி நிகழ்கிற தென்றால் முற்குறித்த பொருள்கள் உடலிற் சென்றவுடன் ரத்தம் கெட்டு விடுகின்றது. இது மூளையிற்சேர்ந்ததும் மூளை கெட அறிவும் மங்குகின்றது பொதுவில் நோயில் பீடிக்கப்பட்டிருக்கும் போதெல்லாம், மனது நன்றாயிருப்பதில்லை. இதுவுமன்றி மூளையில் ஏதரவது ஒரு குறித்த பாகத்தைச் சிதைத்து விட்டால் ஒருசார் தொழில்கள் நடைபெறாமல் நின்று போகின்றன உதாரணமாகக் குடுமிபடும் இடத்திற்குக் கீழுள்ள மூளைப்பாகத்தை மாத்திரம் நீக்கிவிடுவோமாயின் கண்ணும் கண்ணின் நரம்புகளும் கேடுபடாதிருந்தாலும் பொருள்கள் நமக்குத் தோன்றா. நெற்றிக்கு மேலிருக்கும் மூளையின் முன்பாகத்திற்கும் பழுது நேரிடுமாயின், ஞாபகசத்தி குன்றிப்போம்; பொருள்களை ஒன்றோடொன்று ஓப்பி ட்டுப் பார்க்க ஏலாது; பல விஷயங்களை ஒருங்கு சேர்த்து நினைக்கும். ஆற்றலும் அடியோடழியும். இவையெல்லாம் மேல் நாட்டு மூதறிவாளர் தேராக வேகண்டு பிடித்த உண்மைகள்; இன்றும் இவைகளை ருஜுப்படுத்தக் கூடும். இதுவரையில் சொல்லி வந்ததினால் மூளையில்லாவிடத்து, அறிவு இச்சை முதலியன இல்லை என்பது வெளியாக வில்லையா? ஆகவே மூளை மரணத்தின் பின் அழிந்து போன பிறகு அறிவு முதலியனவும் உடன் அழிந்து போகின்றவைதானே? ஆதலால் என்றும் அழியாத ஆன்மா என்றும் ஒரு பொருள் தேகத்திற்கு வேறாய் இருக்கிறதென்னுங் கொள்கை பிசது என்றே நினைக்கின்றேன்..

**சுந்தரம்:** - தாங்கள் எடுத்துக்காட்டிய உண்மைகள் மறுக்க முடியா தனவாய்த் தோன்றுகின்றன; தாங்கள் பேசிய கடையும் இனிமையுடைய தாய்ப்புலப் பட்டது, நித்தியமான ஆன்மா ஒன்று உண்டென்று எவ்வாறு மெய்ப்படுத்து வதோ எனக்குத் தெரியவில்லை. (சிவஞானத்தை நோக்கி) இதுபற்றித் தாங்கள் எனக்கு அறிவுறுத்துவது என்ன என்று அறிந்து கொள்ள ஆவலுடையேன்.

**உலகம்:** - என்னுடைய எண்ணமும் அதுவே வேடிக்கையாகச் சிறிது நேரம் கழித்து விட்டுப் போது நோக்கத்தோடு வந்தவிடத்து முக்கியமான ஒரு பொருளைப்பற்றி ஆராய்ச்சிசெய்ய நேர்ந்தது. நான் இதைப்பற்றி ஆலோசித்ததின் பயனாக ஹக்ஸ்லி, டிண்டால் ஹியூம், ஹக்கல் முதலியோர் கொள்கையே சரியென்று தீர்மானித்துள்ளேன். ஆயினும் நீர் புதிதாகச் சொல்லுவது ஏதாவதிருக்தால் அதையும் ஆராய்வதில் எனக்கு விருப்பமே.

**சிவஞானம்:** - நண்பர்களே! நானும் என்னை இன்னான் என்று நேர் அநுபவத்தில் முற்றுமாக இன்னுங் காணவில்லை. ஆயினும் நான் என்னப்படும் ஆத்மா என்றொரு பொருள் இவ்வுடலுக்கு வேறாக உண்டு என்பதை மாத்திரம்

அறிவினளவாகவும் அனுபவ அளவாகவும் மெய்யெனக் காட்டல் கூடும் என்று நினைக்கிறேன், நாயுடு அவர்கள் வந்த முடிபுக்கு எந்தவிதமான ஆராய்ச்சி கருவியாயிருந்ததோ அதே தன்மையான ஆராய்ச்சியை நாமுங் கைக்கொண்டு இன்னும் சோதிப்போம், முதலாவது அவர், மூளைக்கும் அறிவிற்கும் உள்ள நெருக்கமான தொடர்பைப்பற்றி எடுத்துகாட்டியவையாவும் உன்மைகளே என்று ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அவ்வுண்மைகளின்றும் இவர் பெற்ற முடிபு அவ்வளவு சரியான தென்று என்பது மாத்திரம் சந்தேகம், ஒரு ஆராய்ச்சி செய்யப் புகுங்கால் அதற்கு இயைபுடைய எல்லா உண்மைகளையும் நன்கு துருவிவிப்பார்க்க வேண்டும். ஆராய்ச்சி தொடங்கு முன்னமே, ஒரு சொள்கையில் நமக்குப் பற்றாக இருந்தால், அதனை மெய்யென்று நாட்டற்கு உதவியாயுள்ள உண்மைகளை மாத்திரம் எடுத்துக் காட்டுவதும், அதற்கு இழிவுதேடக் கூடிய உண்மைகளை அறிந்தோ அறியாமலோ ஆராயாது வளாவிடுத் தொழிதலும் மனித இயற்னை. லார்ட். பேகன் தாமெழுதிய 'நோவம் ஆர் கேனம்' என்னும் நூலில் சொல்லியுள்ள ஒரு சிறு கதை இப்போது நினைவிற்கு வருகின்றது அதாவது : ஒருவன் ஒரு கோயிலில் தொங்கவிட்டிருந்த பல மனிதர்களின் படங்களை மற்றொருவறுக்குக் காட்டி 'இதோ பாரும், இவைகள் யாவும், தாங்கள் செய்யப் புகும் கப்பல் யாத்திரையால் சம்முயிர்க்கழிவு நேரிடாது போயின், இத்தெய் வத்திற்குத் தக்க காணிக்கைகள் செலுத்துவதாக வணங்கிக் கட்டுரைத்துச் சென்று, பிறகு கடலில் கலமுடைந்தும் தாம் தப்பிப் பிழைத்தமையால் இங்குவந்து சொல்விய பிரார்த்தனையை நிறைவேற்றியவர்களது படங்களேயாம். இனியேனும் நீர் தேவதைகள் நம்மனோரைக் காப்பாற்றும் அருளும் ஆற்றலும் உடையவர்கள் என்பதை ஒத்துக்கொள்வீயல்லவா?' என்று கேட்டான். ஆனால் பிரார்த்தனை செய்திருந்தும் மாண்டொழிந்தோர் படங்கள் எங்கிருக்கின்றன' என்னும் பதிற் கேள்வி பிறந்தது - - என்பதாம். இக்கதையிற் சாட்டப்பட்டுள்ள குற்றமே நமது நண்பர் செய்த விசாரணையிலும் பொதிந்துள்ளது. அதில், மூளையின் பெருக்க சுருக்கங்களுக்கும் சுகலை ஆசுக சிலைகளுக்கும் தக்கவாறு, அறிவும் உயர்வையோ தாழ்நிலையையோ அடைகின்றது என்று நிலைகாட்டுதற்கு வேண்டிய உண்மைகள் மாத்திரமே காட்டப்பட்டன. இக்கூற்றை வெட்டிச் சாய்க்கும் படியான வேறொரு சார் உண்மைகளும் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளனவே அவைகட்கு என்ன செய்வது? மூளையானது வலுவொடுங்கிக் கெட்டுக் கிடக்கும் நிலைமையில் அறிவு முறுகிவளர்த்து தோன்றுகிறது என்று ஒருவர் நாம் ஒத்துக் கொள்ளும்படி காட்டுவாரானால் அப்போது எம்முடிபைக் கொள்வது? இம் மட்டுமா! உடலின் தொடர்பை விலக்க விலக்க நம்மறிவு விரிவுடையதாகின்றது, நமது ஆன்ம சக்தி பெருகித் தோன்றுகின்றது என்றும் கொள்ளற்குப்போதிய சான்றுகள் உள்ளன,

**உலகம், சுந்தரம்: -** அப்படியா! ஆனால் தயை செய்து அவைகளைக் காட்டவேண்டும்.

**சிவஞானம்: -** நல்லது. இப்போது நான் சொல்லப்போவதெல்லாம் கூட அறிவிற்சிறந்த ஐரோப்பிய நன்மக்களாலேயே கண்டு பிடிக்கப்பட்ட உண்மைகள். சில வருஷங்களாக அவர்கள் பிறர் மனம் மொழிகளைத் தம்வயப்படுத்தல்,

பேய்களினுண்மை, யோக நித்திரை, யானதக்காட்சி முதலிய அரிய அனுபவங்களை நுனித்தாராய்ந்து வருகின்றனர். அதில் மிக எளிதாகயாவரும் சோதித்தறியக் கூடிய ஒருவிஷயத்தைப்பற்றி மாத்திரம் நாம் இப்போது தெரிந்து கொண்டால் போதும். சித்ததிடம் அல்லது மனதைக்குவிக்கும் ஆற்றல் கைவரப்பெற்றுள்ளோர், மாந்தர்களைத் தம்கட்டளைப்படி நடக்கச் செய்யும் வன்மை பெற்றுள்ளாரென்பதைப் பல இடங்களிற்காணலாம். இதை hypnotic power என்று ஆங்கிலத்தில் சொல்லுவார் கள், ஒருவன் இச்சித்தி யடைந்தவனது மன வன்மைக்குக் கீழ்ப்பட்டு மந்திர நித்திரையில் அடங்கிக் கிடக்கையில் அவனது உடம்பின் முக்கிய கருவிகள் அடைந்துள்ள நிலைமையை அற்புதமான யந்திரங்களின் துணை கொண்டு ஐரோப்பிய பண்டிதரில் சிலர் ஆராய்ந்து பார்த்தார்கள். பார்த்ததில் இருதயம் (heart) அசுத்தரத்தத்தைச் சுத்தஞ்செய்யும்படி காற்றுப்பைக்கு அனுப்பும் தொழிலையும், சுத்த ரத்தத்தை உடம்பு முழுவதும் பரப்பும் தொழிலையும் முன்போற் செய்யாது வாளாகிடக்கின்ற தென்பதும், மூச்சு வாங்குதல் விடுதல் என்னும் இரண்டு செயல்களையும் காற்றுப்பை (lungs) ஏறக்குறைய முற்றுமே மறந்திருக்கிற தென்பதும் திண்ணமாய்ப் புலப்பட்டன. நரம் கவனிக்கவேண்டுவதென்ன வென்றால், இதயமும் காற்றுப்பை யும் இவ்வண்ணஞ் செயல் மறந்திருக்குமாயின் உடம்பு முழுவதும் கெட்ட ரத்தமேதங்கிநிற்கும். அவ்வாறே மூளையிலும், எனவே மூளை தன் வலிகுன்றி இறந்துபட்டதெனச் சொல்லக்கூடிய நீலைமைக்கு வந்துவிடும். இனி பித்தநீர்க்குப் பிறப்பிடம் ஈரல் ஆதல் போல அறிவிற்குப் பிறப்பிடம் மூளையாயின் இந்நிலையில் அறிவு அடியோடு மறைந்தாவது அல்லது மிகவும் மங்கியாவது போகவேண்டும். ஆனால் நிகழ்வதோ மிக வியக்கத்தக்கது. இந்நித்திரையிலுள்ளோன் தனது குழந்தைப் பருவத்தில் தனக்குநேர்ந்த சிறு சிறு சம்பவங்களையும் கேட்ட மாத்திரத்தில் சொல்லுகின்றான். அவனுக்குத் தெரியாத ஒருமொழி யிலுள்ள வாக்கியங்களை விரைந்து ஒருமுறை படித்துப் பிறகு அவனைத் திரும்ப சொல்லும்படி கேட்டால் உடனே தடையின்றி அவ்வாறு செய்கின்றான். இவ்வற்புத ஞாபக சக்தியானது அந்நித்திரை யினின்றும் எழுப்பப்பட்ட வுடன் மறைந்துபோகின்றது; மீட்டும் அதிற் புகுத்தினால் இன்னொருமுறை தோன்றுகின்றது. அன்றியும் இயற்கையில் மிக மந்த புத்தியுடையவன் இவ்வரிதுயிலிற் புகுந்த பிறகு ஆழ்ந்த நுண்ணறிவோடு பெரிய விஷயங்களை ஆராயும் திறமை பெறுகின்றான். இம்மட்டுமோ அவனது ஐம்புலன்களையும் முற்குறித்த மனோவல்லமை யுடையோன் தான் விரும்பியபடி ஆட்டு வித்தல்கூடும். பயித்தியக்காரர்களிற் சிலர் இவ்வரி துயிலிற் செலுத்தப்பட்ட பின்னர் நல்லறிவுடையவர்களாக விளங்குகின்றார்கள், அத்து பின் கலைந்ததும் முன்னிலைமையே அடைகிறார்கள்.

இந்நிகழ்ச்சிகளினால் நாம் என்ன உண்மை கைவரப்பெறலாம்? நமது மூளை வலுக்குறைந்திருக்கையில் நம்மறிவு விரிந்தோங்குகின்றது என்று புலப்படவில்லையா? நம் இயற்கையான நனவு நிலையில் மூளையின் வழியாய் வெளியாகும் அறிவுப் பகுதியை விட ஆழ்ந்த அகன்ற பெரும்பகுதியொன்று மறைந்து நிற்கின்றது. அது முற் குறித்தவை போன்ற சிற்சில அவஸரங்களில் மூளையின் உதவியன்றியே வெளியாகின்றது, எனவே மனித அறிவை

மூளையானது நன்றாய் விளங்க வொட்டாது கட்டுப்படுத்தி மறைகிறதேயன்றி அதனை பிறப்பிக்கவில்லை என்றும் முடிவுக்கன்றோ வந்து விட்டோம்! அதாவது மூளை அறிவைத் தோற்றுவிக்கிற தென்பது பொய்யாக, அறிவு தன்னொரு கூறை மூளை வாயிலாய் வெளிப்படுத்துகிற தென்பதே மெய்யாயிற்று. கனவில் வெளிப்படாத அறிவுப்பகுதிக்கு மையர்ஸ் பண்டிதர் சமுத்திரத்திலுலவும் பனிமலையில் நீர் மட்டத்திற்குக் கீழ்மறைந்து நிற்கும் பெரும்பகுதியை உவமித்தார். இவ்வுண்மை ஐரோப்பிய அறிஞர்களிற் பலரால் நன்கு நிலை நாட்டப்பட்டுள்ளது,

இனிக் கனவுாளினியல்பையும் ஆராய்ந்தபோது இயற்கை நனவு நிலையில் அனுபவவிப்பதாயின் ஆறு மாதத்திற்குக் குறையாத காலம்வேண்டு மென்று மதிப்பிடக்கூடிய மன நிகழ்ச்சிகள் கனவில் அரை நொடியில் அனுபவிக்கப்படுகின்றன என்று தெரியவருகின்றது. இந் நிகழ்ச்சிகள் நாம் நனவிற்குத் திரும்பிய போது நினைவிற்குக் கொண்இவரக்கூடும் ஆதலாலும் அவைகலைப் பொய்யென்றோ துக்க இயலாது. இதனால் நாம் பெறக்கூடிய முடிவு என்ன வெனில் கனவில் நம் மறிவு மூளையினும் வேறாய் அதனிலும் மிகக்சூக்குமமாயுள்ள ஒன்றின் வாயிலாய்த் தன்னை வெளிப்படுத்துகின்றது என்பதாம்.

இவ்விசாரணையாகிய ஏணியில் இன்னுமொருபடி ஏறுவோம்; நம்மறிவு, மூளையே இல்லா விடத்து, அதாவது உடல் அழிந்தபின்பு உடனழிந்து பொகுமோ அல்லது நிலைபெற்றிருக்குமோ என்பதை ஆராய்வோம். இங்கும் சுருதிப் பிரமாணத்தை நாடாமல் காட்சி யளவையையே கொண்டு பார்ப்போம். 1882ம் - ல் இங்கிலாந்தில் 'ஸைகிகல் ரீஸர்ச் ஸொஸையிடி' என்னும் பேரோடு மையர்ஸ், போ மேனீஸ், பாரெட் முதலிய சில மூதறிஞர்கள் ஒரு சபை ஏற்படுத்தினார்கள். அதன் நோக்கம் நாம் இப்போது பேசிவரும் விஷயங்களின் உண்மையை ஆராய்வதுதான். அச்சபை இன்றுவரையில் நிலவி நின்று ஆஸ்திக உலகுக்குப்பேருதவி செய்து வருகின்றது. அதன் அங்கத்தவர்களாயுள்ளோர் இயங்கியற்பொருள்களையும் மிக நுண்ணிய அறிவோடும் யந்திரத்துணையோடு மாராய்ந்து போதிய சான்றின்றி எதையும் நம்புதல் கூடாதென்னும் கொள்கையிற்றலை நின்று பல அரிய உண்மைகளைக் கண்டுரைத்தமையால், அறிவுடை உலகத்தால் நன்கு மதிக்கப்பட்ட விற்பன்னர்கள், அவர்களிற் பலர் இச்சபைவிற் சேர்ந்த பின்னுங் கூடச் சிலகாலம் வரையில் அறிவு அல்லது ஆன்மா என்னு மொன்று உடலழிந்த பிறகும் உண்டென்று நம்ப அவர்கட்குப் போதிய சான்று கிடைக்காமையால் தாங்கள் ஆன்மா என்னும் சித்தியபொருளினிருப்பை ஒத்துக்கொள்ள முடியாதென்று சொன்னவர்கள் தாம். இப்படிப்பட்ட அறிவாளிகள் செய்த பரிசோ தனைகளெல்லரம் அவ்வப்போது அச்சபையார் வெளியிட்ட பத்திரிகைகளில் விளங்க எழுதப்பட்டுள்ளன. அவைகளை நீங்கள் பார்த்திரு க்கலாமே?

**உலகம்:** - பார்த்த தில்லை.

**சிவஞானம்**: - அவைகளை யெல்லாம் படிக்க ஓய்வில்லாவிடினும் மையர்ஸ் என்பவர் இயற்றிய 'Human Personality and its Survival after Bodily Death' அரிய நூலை வாசிக்கவேண்டுகி'றேன் அதுவும் இப்போதியலாதானால் பார்ரெட் துரையவர்கள் செவித 'Psychical Research' என்னும் சிறிய நூலையாவது வாசித்தால் சாலும், அவைகளிலுள்ள பெரிய கருத்துக்களையெல்லாம் இப்போதெடுத்துச் சொல்ல இயலாதாகையால் அவைகள் காட்டும் முடிவை மாத்திரம் குறிக்கின்றேன். அது ஆக்கையழிந்த பின்னும் அறி வழிவதில்லை என்பதே, இக்கொள்கை மெய்யாயிருக்கமுடியாதென் னுங்கருத்தோடு விசாரணையைத் தொடங்கி வேண்டிய அளவு சாக்ஷயிருந்தாலல்லது உள்ள தெனக் கொள்ளலாகாதென்பதை உயிர்க்குறு திபயக்கும் மந்திரம் போல் கொண்டு அதன்வழி நின்ற நுட்ப மதியாளரே இது உண்மைதான் என்று பின் ஒத்துக்கொண்டு அதற்கு வேண்டிய நியாயங்களை விளங்க விரித்துள்ளார்கள். தூரதேசத்தினிகழ் பவற்றை நாம் வழங்கும் எவ்விதமான கருவியின் துணையுமின்றி இங்கிருந்தே அறிந்து கொள்ளலும், பிறர் மனதிலுள்ள எண்ணங்களை தாமாகவே கண்டுரைத்தலும், இறந்து போனவர்கள் இவ்வுடலிலுள்ளோர்க்குத் தம் கருத்தை வெளியிடுதலும், பேய்பிடித்தலும், சிலஇட.ங்களில் அலகை முதலியன குடியிருந்து பயமுறுத்தலும் இன்னுமிவைபோன்ற பல அபூர்வச்செயல்களும் அடியோடு அசம்பாவிதமென்று தள்ளி விடக்கூடாத மெய்ப்பொருள்களே என்று கொள்ளற்குப் பலகாரணங்கள் விளக்கப்பட்டுள்ளன. சிலகீழ்மக்கள் தமதறிவினாற்றலைத் தந்நலங்கருதிப் புரட்டுவழிகளிற் பயன்படுத்துவது மெய்யேயாயினும், முன் குறித்த நிகழ்ச்சிகள் உள்ளனவே என்பதில் சற்றும் ஐயமில்லை,

**உலகம்**: - இந்தச்சபையைப்பற்றி எனக்குச் சிறிது கேள்விமாத்திரம் உண்டு. ஆனால் அதன் செயல்களைப்பற்றி எனக்கு நன்மதிப் பிருந்ததில்லை. இவ்விசாரணை செய்வோர் பலவழிகளில் ஏமாந்துபோ கக்கூடுமென்பது வெளிப்படை.

**சிவஞானம்**: - மெய்தான் மேதாவியாய க்ரூக்ஸ், சந்தேகாவதாரமாயிருந்த மையர்ஸ், நுண்ணறிவிற் குறைவிடமாகிய ஸிட்ஜ்விக், பாந்த அறிவினராகிய லாட்ஜ் முதலியோரெல்லாம் நீர் குறிக்கும் ஆபத்துகளை முன்னமே உணர்ந்து தாங்கள் மயங்கிப்போகா திருக்கும் வழிகளைக் கற்பித்துக்கொண்டு பிறகுதான் முடிவு சொல்ல ஆரம்பித்தனர் தயை செய்து அவர்கள் சொல்லியவற்றை வாசியும்,

**உலகம்**: - அப்படிச் செய்யாதிருந்தது பிசகுதான். இனி நான் விரைவில் அவ்வாறே செய்கின்றேன்.

**சிவஞானம்**: - சந்தோஷம், ஹியூம் இவ்விஷயமாகச் செய்த ஆராய்ச்சியைக் குறித்தீர்கள். அதையும் சிறிதுகவனிப்போம், சுருக்கிக்கூறில் அவர் சொன்ன தாவது 'எனது மனதில் ஒன்றன்பின் னொன்றாகத் தோன்றும் பல்வகைப்பட்ட நிகழ்ச்சிகளையும் நிலைகளையும் தனித்தனித் துருவி யாராய்ந்து பார்த்தேன். அவைகளுக்கு வேறாக ஒரு அறிவுடைய பொருள் இருக்கக்கண்டிலேன், இனி மனித

உடலத்திற் உள்ளும் புறம்பும் அணுவளவிடமும் விடாது தேடிப்பார்க்கினும் ஆன்மப் பொருளைக்கண்டேனில்லை. ஆதலால் ஆன்மா என்பது இல்பொருளே' என்னும் சூனிய வாதமே, இப்போலி நியாயங்களை அறிவாளிகள் முன்னமே கண்டு நன்கு கண்டித்துள்ளார்கள். அதை விரித்துரைக்க வேண்டுவதில்லை. மனநிகழ்ச்சிகளுக்கும், நிலக்கட்டும் வேறாய் அவைகளை யெல்லாம் ஒன்று படக்சேர்த்துப் பிடிக்கும் அறிவுப் பொருள் ஒன்று உளதென்று கொண்டாலன்றி ஞாபகசக்தி யுண்மை, தன்னறிவு இச்சைசெயல்களைத் தானேசாக்ஷியாக நின்று காணும் அனுபவம் என்னு மிவை போன்ற பல நிகழ்ச்சிகளுண்மைக்கு வழி ஏற்படாது. அன்றியும் ஹியூம் துரை தன் மனதைச் துருவிப் பார்த்ததாகச் சொல்லுகிறாரே அப்படி பார்த்ததெது அதுவுமனதில் தோன்றும் பல்வகை நிகழ்ச்சிகளில் ஒன்றாயிருக்க முடியாதே! இவர் கூற்று அவிவேக பரிபூரண குருவும் அவர் சீடர்களும் ஆறு தூங்கியிருக் குப்சமயத்தில் அதைத்தாண்டி கரை ஏறின பின் எண்ணினவன் தனனை விட்டு எண்ணிப்பார்க்கையில் தம்மில் ஒருவரை அது விழுங்கிவிட்ட தென்று மனமறுகிய கதையையும் என் தாய்மலடி என்றவனது அறிவு நுட்பத்தையும் நினைப்பூட்டுகின்றது. இனி உடலெங்குந்தேடியும் கண்டிலேனென்பது ஊரெங்குந் தேடியும் ஆகாயம் ether புலனாகவில்லை என்று முறையிட்டதை ஒக்கும். கடைசியாக இன்னுமொரு விஷயத்தைச் சுருக்கிசொல்ல எண்ணம். ஆன்மா தேகத்திற்கு வேறாக உண்டென்பதை நாம் முயற்சி செய்தால் நம்மனுபவத்திலேயே கண்டு கொள்ளல் கூடும். இவ்வுடலத்தினின்றும் சிறிது நேரம் நாம் வெளியேறி யிருந்து சுற்றிலும் நடப்பவர்களைக் காணல் அசாத்தியமல்ல. அப்படிக்கண்டார் முன்னும் பலர் இருந்தார்கள். இன்னும் சிலராவது உள்ளார்கள், இவ்வநுபவம் நம்நாட்டு ஞானிகட்குக் கைவந்தது போல் பிறதேசத்தார்க்கு அவ்வளவு பெரும்பான்மையாகச் சாத்தியப்பட்ட தில்லை, நீரும் நானும் அவ்வுண்மையை அநுபவ வழியாய் அறிய வேண்டுமாயின் செய்யவேண்டுவதெல்லாம் என்னெனில் நமது ஐம்புலன்களையும் அடக்கிப்பிறகு நம் மனக்குரங்கையும் அமைதியோடு குவிந்திருக்கப் பண்ணுவதேயாம். இவ்வாறு மனம் அடங்கியதும் ஆத்மதர்சனம் கிடைக்கும். உடனே விறற்றீ பினற்போல் மறைந்து நிற்கும் மாமணிச் சோதியின் காட்சியும் சித்திக்கும். 'திரையற்ற நீர்போல் சிந்தைதெளி வார்க்குப், புரையற்றிருந்தான் புரிசடையோனே' என்று திருமூவர் என்னும் மகாஞானி உபதேசித்ததும் இவ்வுண்மையையே. இதுவரையில் பேசின தெல்லாம் ஆன்மா ஒன்று உண்டு அதுதேகமுமல்ல, புலன்களுமல்ல. மனமுமல்ல; இவைகட்கெல்லா முயர்ந்த சாதாரண நிலையில், இவைகளால் தான் ஒளி விளங்காதிருக்கும்படி கட்டுண்ணப்பட்டு நிற்பதாகிய ஒரு அரும் பொருள் என்பதை வற்புறுத்தும் பொருட்டே. இனி இத்தகைய ஆன்மப் பொருளின் முழு இலக்கணந்தான் என்ன வென்பது பின்னாபாயத்தக்கதோர் விஷயம். இம்மட்டில் உண்மை தெளிந்தாலல்லது மேற்செல்வதில் பயனில்லை. ஏதோ என் புன் மொழிகளால் இப்பெரிய பொருளைப்பற்றி விலாந்து சுரு கிக்கூறினேன், வேறுவிதமாக கருதிப்பிரமாணத்தால் ஆன்ம இருப் பை நாட்டுதலும் கூடும் ஆயினும், இன்றெழுந்த விவாதத்திற்கு அவ் வழியாகச் சென்று பதில் தரல் அவ்வளவு சிறப்பாயிராதென்றுன்னி மேற்புலவிஞ்ஞானிகள் போக்கையே தழுவிக்கூறினேன், நான் சொ ன்னேனென்று நீங்கள் மெய்யென்றாவது முடிபு

செய்யமாட்டீர்கள் ளென்று நம்புகிறேன்." எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதுணர்வு" ஆகலின் கேட்டதைச் சிந்தித்து ஆராய்ந்து சரியென்று எதுபடுகின்றதோ அதையே மெய் யெனக்கொள்ளலாம்.

**சுந்தரம்: -** (சிவஞானத்தைவணங்கி) தாங்கள் நீறுபூத்த நெருப் புப் போலிருக்கின்றீர், நமது நண்டர் ஆன்மா இல்லை என்பதற்குத் தமது நியாயங்களைக் காட்டியபோது இவைகளையும் மறுக்கமுடி யுமோ என்று கலங்கினேன். இப்போது கடல் மடைதிறந்தாப் போல் தாங்கள் ஒன்றின் பின்னொன்றாக எதிர்த்துரைக்க முடியாவண் ணம் உண்மைகளை நிறம்பக்கோத்து ஆன்மா உண்டென்பதைத் திடமாக நாட்டினீர்கள். இவ்விஷயத்தில் இனி எனக்கு ஐயம் நிகழா தென்பது திண்ணம். 'இப்பேருபகாரத்திற்கு இறைவனே தங்கட்குக் கைம்மாறு செய்யவல்லவன்.

**உலகம்: -** நண்பரே! நான் ஏதோ ஸையன்ஸெல்லாம் படித்துக் கரைகண்டு விட்டதாகவும் 25 - வருஷத்துக்குமுன் மேல் நாட்டில் பிறந்த நாஸ்திக உலகாயதக் குப்பைதான் அவர்களிப்போதும் போற்றும் செம்பொருள் என்பதாகவும், கொண்டு மயங்கிச் சற்றுச் செருக்குக் கொண்டிருந்தேன், தங்கள் கிருபையால் அம்மயக்கு குன்றிற்று; செருக்கழிந்தது. தாங்கள் குறித்த நூல்களை அவசியம் வாசிக்கின்றேன், அநேக நமஸ்காரம் தங்களுக்குச் செய்கிறேன்.

**சிவஞானம்: -** எல்லாம் பரமேச்சுரனது திருவருட்செயல் என் செயலால் ஆவதொன்றுமில்லை,

இதற்குள் நாம் பெருமாள் செட்டியார் வந்தனர்,

**சிவஞானம்: -** செட்டியாரவர்கள் நமஸ்காரம் வரவேண்டும்.

**உலகம்: -** மணியாய்விட்டது. சுவாமியார் இந்நேரம் பிரசங்கம் தொடங்கி யிருப்பார்.

**சிவஞானம்: -** மெய்தான் நாங்களும் இதோ வருகிறோம் தயை செய்து ஐந்து நிமிஷம் இரும், சிவஞானமும் சுந்தரமும். செட்டியாரோடு பிரசங்கத்திற்குச் சென்றார்கள்.

ச. சச்சிதாநந்தன்.

சித்தாந்தம் - 1912 / 1914 ஹு -
செப்டம்பர், நவம்பர், ஜூலை, ஆகஸ்ட், மீ